# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அதுவே நான் ! |
| ஆசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | உபதேசம் |
| முதற்பதிப்பு | : | 2022 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 16 |
| தாள் | : | A4 |
| எழுத்து அளவு | : | 14 |
| உரிமை | : | அனைவருக்கும் |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு |
| வெளியீடு | : | பராவித்யா |
| விலை | : | அகவிழிப்பு |

# “அதுவே நான்”

எனக்கு உறக்கத்திலிருந்து விழிப்பு வந்தவுடன், கண் விழித்துக் கடிகாரத்தைப் பார்த்தேன். அப்போது, நேரம் விடியற்காலை 4.35 எனக்காட்டியது.

ஆழ்ந்த உறக்கத்திலிருந்து விழிப்பு நிலைக்கு வந்தவனுக்கு, தற்போது மணி 4.35 ஆகின்றது என்பதை இந்த தேகத்தில் உள்ள கண்களினால் கண்டு, நேரத்தை ‘**இன்னது**’ என்று அறிந்துக்கொண்டு இருக்கும் நானா? இதுவரை என்னை அறியாமல், ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தேன்?...



அத்துடன், தற்போது, மணி 4.35 ஆகின்றது என்பதை கண்கள் என்ற புலன்களைக் கொண்ட இந்த **தேகம்** அறிகிறதா?... அல்லது கண்களின் வாயிலாகக் கண்டதைக் கொண்டு, இந்த **மனம்** அறிகிறதா? என்ற எண்ணம் என்னுள் எழுந்தது.

ஆக, அந்த எண்ணத்தை என்னுள் எழுப்பியது இந்த மனம்தான் என்றால், எழுகின்ற எண்ணங்களைக் கொண்ட அந்த மனதையும், அந்த எண்ணங்களுக்கு ஏற்ற செயல்களைச் செய்யும் உடலையும் கொண்டுள்ள **‘நான் மனமா?’** அல்லது **‘நான் உடலா?’** என்ற அடுத்த எண்ணம் இன்னும் ஆழமாக எழுந்தது?

இவ்வாறு, எண்ணங்களை எழுப்புகின்ற "**மனம்**" நானாக இருந்தால், இதுவரை உறங்கிக்கொண்டிருந்த உறக்கத்தில் **‘நான்’** என்ற எனது **“இருப்பு”** இல்லாமல் போனதை என்னால் அறிய முடியாமல் அல்லவா? ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தேன்.

எனவே, **‘நான்’** நிச்சயமாக, **‘மனம்’** என்பதாக இருக்க முடியாது! ஆக, **‘நான்’** என்பது இந்த உடலா? என்றால், இந்த உடல் இருப்பதையும் அறிய முடியாமல் அல்லவா? ஆழ்ந்து உறங்கிக் கொண்டிருந்தேன். ஆகவே, **‘நான்’** என்பது இந்த உடலாகவும் இருக்க முடியாது.

ஆனால், இந்த **மனமும், உடலும்** இணைந்து இருக்கின்ற என்னுடைய விழிப்புநிலை அனுபவத்தில் **‘நான் இருக்கிறேன்’** என்ற எனது **‘இருப்பு’** எனக்கு, மனமும், உடலும் சார்ந்த அபிமான நிலையில் மட்டுமே அனுபவமாகிறதே தவிர, இந்த மனமும், உடலும் இல்லாத ஆழ்ந்த உறக்க நிலையில் **எனது இருப்பை** என்னால் அனுபவம் ஆக்க முடியாமல் இருப்பதற்குக் காரணம் என்ன?

அதேசமயம், இந்த **மனமும், உடலும்** இருப்பதை அறியமுடியாத ஆழ்ந்த உறக்கத்தில் **“நான் எங்கு இருந்தேன்?”.**

அத்துடன், **‘நான் விழித்துக் கொண்டிருக்கிறேன்!’** அல்லது **‘நான் நன்றாக உறங்கினேன்!’** என்பதை, என்னுடைய விழிப்பு நிலையில் மட்டுமே என்னால் அறிய முடிகின்றது எனும்போது, ஆழ்ந்த உறக்க நிலையில் உண்டான, அந்த ஆனந்த உறக்க அனுபவத்தை விழிப்பு நிலையில் எனக்கு எடுத்துக்கூறுவது எது? அது மனமா? அல்லது புத்தியா? அல்லது உடலில் உள்ள புலன்களா? போன்ற ஏராளமான எண்ணங்கள் என்னுள் எழத் தொடங்கியது.

அது மனமாக இருந்தால், கனவு நிலை அனுபவங்களை அப்போதே என்னுடைய உறக்கத்தில் எனக்குக் காட்டிக் கொடுப்பதுப்போன்று, ஆழ்ந்த உறக்க நிலை அனுபவத்தையும் அந்த நிலையிலேயே எனக்குக் காட்டிக் கொடுத்திருக்க வேண்டும். ஆனால், அப்போது, அதை அறிய முடியாத மனம், எனக்கு விழிப்பு வந்தவுடன்தான் அந்த ஆழ் உறக்க அனுபவத்தை **‘நான் நன்றாக உறங்கினேன்’** என்று கூற முடிகின்றது என்றால், அப்போது, அந்த மனம் எங்கிருந்தது?...

ஆக, இந்த எண்ணங்களை எல்லாம் ஏற்றி வைத்துக்கொண்ட மனம், அதன் தேவைகளுக்கு ஏற்றவாறு அவைகளை உடலின் மூலம் செயல் படுத்திக்கொண்டு, அதே உடலில் மையம்கொண்டு இருக்கின்றதா? அந்த **‘மனம்’** எங்கிருந்து உண்டாகியது? என்ற எண்ணமும் என்னுள் எழத்தொடங்கியது.

இவ்வாறு, எழுந்த எண்ணங்களிடையே, என்னுடைய படுக்கையை விட்டு எழாமல் இருந்த நிலையில், என்னையறியாமல் மீண்டும் அப்படியே உறங்கி விட்டேன்.

இப்போது, மீண்டும் **‘நான்’** என்ற எனது **உடல், மனம்** சார்ந்த அபிமானம் மறைந்து, என்னுடைய **‘இருப்பு’** எனக்குத் தெரியாமல் போனது.

இப்போது, **‘நான்’** வேறு எங்கோ ஒரு இடத்தில் என்னுடைய நண்பர்களிடம் பேசிக்கொண்டிருந்த நிலையில், ஒரு புலி எங்கள் அருகில் வருவதும், அதைக்கண்ட நாங்கள் அனைவரும் அலறி அடித்துக்கொண்டு அங்கிருந்து ஓடுவதும், அந்த ஓட்டத்தில் அந்தப் புலி என்னை மட்டும் வேகமாக துரத்தியதும், அதனால், **‘நான்’** பயத்தில் உறைந்துபோய் அலறியதும், அதன் காரணமாக உண்டான விழிப்பும் எனக்கு அதை **‘கனவு’** என்று அறிவித்தது.



ஆக, கனவு நிலையிலும், விழுப்பு நிலையிலும் எனக்கு அனுபவமாகின்ற மனமும், உடலும் ஆழ்ந்த உறக்க நிலையில் மட்டும் அனுபவத்திற்கு இல்லாமல் இருப்பது ஏன்? என்ற எண்ணம் என்னுள் எழுந்தது.

ஆக, இந்த **உடலும், மனமும்** எனக்கு அனுபவமாகாத ஆழ்ந்த உறக்க நிலையில் என்னுடைய **“இருப்பு”** என்னால் உணர முடியாமல் போனது போன்று, இந்த உடலும், மனமும் விழிப்புக்கு திரும்பவே முடியாத, நீண்ட உறக்கமாகிய மரணத்திற்கு பிறகும், எனக்கு என்னை உணர முடியாமல் போகின்ற, அவல நிலையை அடைந்து விடக்கூடாது என்ற ஆர்வம் என்னிடத்தில் அதிகமாகியது.



**இதற்கு என்ன செய்ய வேண்டும்?...**

என்னை எனக்கு அனுபவமாக்க முடியாத ஆழ்ந்த உறக்க நிலையிலும், மரண நிலையிலும் **‘மனம்’** எங்கு இருந்தது? என்ற எண்ணம் என்னிடம் ஆழமாக எழுந்தது.

மேலும், இந்த மனதைக்கொண்டே, மனம் மறைந்து போகின்ற நிலையை கண்டு பிடிக்க முடியுமா? என்ற கவலையும் என்னுள் தோன்றியது.

அத்துடன், இதுப்போன்று எழுகின்ற எண்ணங்களைக் கொண்டு, அந்த மனதினால் ஆராய்கின்ற **‘நான் யார்?’** என்ற கேள்வியும் அடுத்தடுத்து என்னுள் எழுந்தது.

மீண்டும் அதே குழப்பம். ஆம்! **நான் உடலா?... நான் மனமா?... நான் புத்தியா?...**

நான் பிறந்த குழந்தையாக இருந்தபோது, எனக்கு எதுவுமே தெரியாதே! அப்போது என்னிடம் மற்றவர்களால் ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்கள் ஏதும் இல்லையே!, அதுவே, இந்த உடல் வளர, வளர நிறைய விசய, சுகங்கள் எனக்கு ஏற்றி வைக்கப்பட்டது.

அதன்காரணமாக, உடல் வளர்ச்சி, மூளை வளர்ச்சி என இந்த உடல் சார்ந்த புலன்கள் எல்லாமே புற விசயங்களை நோக்கி ஈர்க்கப்பட்டன. அவைகளை அறியும் ஆர்வம் அதிகமாக எனக்கு உண்டானது. அது எதனால்? என்று எனக்குத் தெரியாமலேயே ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களின் தொகுப்பாக ‘**மனம்**’ உண்டானது. அந்த மனதின் அடுத்த பரிமாணமாக ‘**புத்தி சக்தி**’ உண்டாகியது. அந்த புத்தி சக்தியின் மூலம் ‘**இது, இது இன்னது**’ என ‘**சித்தம்**’ பதிவு செய்துக்கொண்டது. அந்த பதிவுகளின் மூலம் அது எனக்குத் தெரியுமே! என்ற ‘**அஹங்காரம்**’ அந்த மனதுக்கு உண்டானது.

இந்த அஹங்காரம் யாருக்கு உண்டானது எனக்கா?..

எனக்கு என்றால், **“நான் யார்?”**... இந்த மனமா? இல்லை இந்த உடலா?...

இந்த ஆழமான ஆராய்ச்சியின் விளைவாக, என்னால் ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான எண்ணங்களின் தொகுப்பாகிய **‘மனம்’** தன்னுடைய மேம்பட்ட **‘புத்தி’** சக்தியினால் அனைத்தையும் அறிந்துக் கொண்டு, அவைகளை சேகரித்து வைத்துக் கொண்ட **‘சித்தம்’** என்ற பதிவுகளின் மூலம், **‘நான்’, ‘எனது’** என்று பல்வேறு விசய சுகங்களை உண்டாக்கிக்கொண்டு, அதன் வாயிலாக அனைத்தையும் அறிகின்றேன் என்று **‘அஹங்காரம்’** கொண்டு, அவ்வாறு அறிகின்ற மனதுக்கு ஆதாரமாக உள்ள அறிவை அறியாமல் உள்ளது என்ற எண்ணம் என்னுள் தானாகவே எழுந்தது.

ஆக, சில வருடங்கள் மட்டுமே! இந்த பூமியில் வந்து, தங்கி போகின்ற உடலும், என்னால் ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்களினால் உண்டான மனமும், நிச்சயம் **“நான் ஆக இருக்க முடியாது**!”.

ஆக, காது, மூக்கு, கண்கள், நாக்கு, தோல் என ஐந்து புறக்கரணங்களாலான இந்த **‘உடல் நான் அல்ல!’,**

மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்ற அகக்கரணங்களாலான இந்த **‘மனம் நான் அல்ல!’**

அன்னமய கோஷம், பிராணமய கோஷம், மனோமய கோஷம், விஞ்ஞானமய கோஷம் மற்றும் ஆனந்தமய கோஷம் ஆகிய **‘ஐந்து கோஷங்கள் நான் அல்ல!’**

பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என **‘ஐந்து வாயுக்கள் நான் அல்ல!’**

நிலம், நீர், நெருப்பு, காற்று மற்றும் ஆகாயம் போன்ற **‘பஞ்ச பூதங்கள் நான் அல்ல!’**

ஆக, இந்த **ஸ்தூல சரீரம்** நான் அல்ல!, **ஐந்து புலன்கள்** நான் அல்ல!, மனம், புத்தி போன்ற **அந்தக்கரணங்கள்** நான் அல்ல!, **பஞ்ச பிராணன்கள்** நான் அல்ல!, **பஞ்ச பூதங்கள்** நான் அல்ல! என்று ஒவ்வொன்றாக, அனைத்து தத்துவங்களையும் **‘அல்ல’, ‘அல்ல’** என்று மறுத்துக்கூறி, முடிவில், **நான் யார்தான்?** என்று அறியும் ஆர்வத்தின் மூலம் ஆகாயம் போன்று பரந்து, விரிந்த **‘அறிவு’** என்னை மனதின் மூலம் தூண்டுகின்றது என்றால், அந்த **அறிவு** எறும்பு முதல் யானை வரை உள்ள எல்லாப் பிராணிகளின் புத்திகளிலும் ஏற்றத்தாழ்வுகள் இன்றி, அனைத்திலும் காணக்கூடியதாய் இருக்கின்றது என்பது எனக்குள் உரைக்கிறது.

ஆனால், அதை அறிய முடியாத அஹங்கார மனம் தன்னையே **‘நான்’** என்று கருதுகின்றது. அத்துடன், தன் உடலையே **‘நான்’** என்று பாவிக்கின்றது. அந்த உடலின் உள்ளே உறைகின்ற அழிவற்ற **அறிவை** மட்டும் அறிய மறுக்கின்றது. என்று இந்த மனதிற்குப் புரியத் தொடங்கிய அடுத்த விநாடி, அந்த அறிவைத்தான் **“கூடஸ்தன்”** என்று சாஸ்திரம் அழைக்கின்றது என்பதை, அந்த ஆன்ம ஞான கல்வியின் போதனையாக இப்போது எனக்குப் புரிய வருகின்றது.

அதாவது, எல்லா சீவர்களின் புத்திகளிலும் உறைகின்ற அழிவற்ற **“கூடஸ்தன் நான்”** என்பதை, ஏற்றி வைத்துக்கொண்ட ஆன்ம ஞான கல்வியின் மூலம், இந்த மனதின் புத்தி சக்தியால் அதை அறிந்துக் கொண்டாலும், அந்த அறிவாகிய பிரம்மத்தை, இந்த மனதைக் கொண்டு அறிய முடியுமா? அல்லது முடியாதா? என்ற சந்தேகம் என்னுள் எழுகின்றது.

இதற்குத்தான் மனிதனுக்கு மட்டுமே மனதைக் கையாளும் **‘கல்வி’** தேவைப்படுகின்றது.

அது தன்னை அறியும் **ஆன்ம ஞானத்தை போதிக்கின்ற** சுய அறிவு சார்ந்த கல்வியாக இருந்தால் மட்டுமே, மனிதன் தனக்குக் கிடைத்துள்ள பகுத்தறிவாகிய ஆறாம் அறிவைக் கொண்டு, தன் இருப்பை அறிந்து, தன் சுய அறிவால் ஆனந்தமாக எப்போதும் இருக்க முடியும் என்றும் புரிகின்றது.

அதற்கு முதலில், **மனம் என்பது என்ன?** என்று அறிந்துக்கொண்டால் மட்டுமே, அப்படிப்பட்ட மனதிற்கு **‘பிரம்மத்தை (அறிவை அல்லது உணர்வை)’** அறிய முடியுமா? என்பதை புரிந்துக்கொள்ள முடியும்.

இந்த **‘மனம்’** என்ற மகத்தான சக்தியைக் கொண்டுதான் மனிதன் புனிதனாக உயர முடியும். அதேசமயம், அதே மனதைக் கொண்டுதான் மனிதன் மிக மட்டமானவனாக மிருகத்தை விட கீழானவனாக மாறவும் முடியும்.

அது எப்படியெனில், அது மனதின் ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்களை சார்ந்தது.

அதனால்தான் அன்றைய மாகான்கள் மனதை செம்மைப்படுத்தும் கல்வி முறையை மட்டுமே கற்றுக்கொடுத்தனர். ஆனால், ஆங்கிலேயர்களின் **மெக்காலே கல்வி முறையில்** ஏற்பட்ட மாற்றங்கள் மனிதனின் மனம் **நல்ல மனமாக** மாறுவதற்குப் பதிலாக, **கள்ள மனமாக** மாறிக் கொண்டுள்ளதை இன்றைய மனிதர்களிடையே காண முடிகின்றது.

மனிதன் புற விசயங்களை புரிந்துக்கொள்ளும் புத்தி சக்தியை, அப்படியே, அவனது அக விசயங்களில் திருப்பிவிட்டு, அவனால் ஏற்றி வைத்துக்கொண்ட மனதை மேம்படுத்தக்கூடிய வகையில் உள்ள ஆன்ம ஞானக் கல்வியைக் கற்றுக் கொள்ள வேண்டும். அதையும் இளைமையிலேயே கற்றுக் கொள்ள வேண்டும். அப்போது மட்டும்தான் அவனது மனம் செம்மையாகி, அவனால் இந்த சமுதாயத்திற்கு அனேக நன்மைகள் உண்டாகும்.




இந்த மனதிற்கு தேவையற்ற விசய, சுகங்களைக் கொடுக்கக்கூடாது என்றுதான் **திருவள்ளுவர், திருமூலர்** போன்ற அறிஞர் பெருமக்கள் மனதை செம்மைப்படுத்தக்கூடிய கல்வியைக் கற்றுக் கொடுத்தனர். அதிலே, அவ்வையார் அருளிய **ஆத்திச்சூடி, கொன்றை வேந்தன்** போன்ற அரிய பல தமிழ் நூல்களை அன்றைய நம் தமிழக பாடத்திட்டத்தில் வைத்திருந்தனர்.

அவைகள் எல்லாம் இன்றைய தமிழ்நாடு பாடத்திட்டங்களில் இருந்து திட்டமிட்டு நீக்கப்பட்டுள்ளது. அவ்வாறே, நம் தேசத்தந்தை **காந்தி மகான்** அவர்களும் **தீயவைப் பார்க்காதே!, தீயவை கேட்காதே!, தீயவை பேசாதே!** என்று மனதின் போக்கை மாற்றக்கூடிய தவறான வழிமுறைகளை எதிர்த்தார் என்பதையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

ஆனால், இன்றைய இளைய சமுதாயத்திற்கு இவைகள் எல்லாம் கற்றுக் கொடுப்பதில்லை!. **பணம் சார்ந்த தொழிற்கல்வி மட்டுமே** கற்க வேண்டிய கட்டாயக் கல்வியாகக் கற்பிக்கப்படுகின்றது.

அதற்குக்காரணம், அரசு அதிகாரிகளும், அரசியல்வாதிகளும் இந்த மெக்காலே கல்வித் திட்டத்தில் கற்று வந்ததின் விபரீத விளைவே, இதுப்போன்ற கல்வி முறையில் உண்டாக்கப்படும் மாற்றங்கள் என்று அறிய முடிகின்றது.

ஆனால், அன்றைய கல்வி முறையில் மனதை மேம்படுத்தி, அந்த மனதிற்கு ஆதாரமான அறிவை அறியக்கூடிய அரிதான பாடத்திட்டங்கள் கற்றுக் கொடுக்கப்பட்டன. அந்த கல்வி முறையின் மூலம் மனிதன் புனிதனாக மாறக்கூடிய வழிமுறைகள் அனைத்தும் போதிக்கப்பட்டன. அத்துடன், மாணவர்களுக்கு புற அறிவை திணிப்பதற்கு பதிலாக, அக அறிவை வெளிக்கொண்டு வருவதற்கான அத்தனை அம்சங்களும் அன்றைய பாடத்திட்டங்களில் கையாளப்பட்டன.

அதன்காரணமாக, மனிதன் தன் இந்திரிய சுகங்களுக்கும், மனதின் போக்கிற்கும் மண்டியிடாமல், அந்த அகண்ட அறிவின் வெளிப்பாடாக உள்ள அறிவைக் கொண்டு, அனைத்து கண்டுபிடிப்புகளும் கண்டறியப்பட்டன.

அதிலே, மனிதன் தன் மனதைத் தானே ஆராய்ந்து, அதன் வாயிலாக அறிவை அறிந்து, அதன்காரணமாக, அவனது அகத்தில் கண்டறியப்பட்ட **ரிக், சாம, யஜுர், அதர்வண** போன்ற நான்கு வேதங்களும், இத்துடன் தனுர் வேதம் (போர் அறிவியல்), காந்தர்வ வேதம் (கலை அறிவியல்), ஆயுர் வேதம் (மருத்துவ அறிவியல்), ஸ்தபத்ய வேதம் (கட்டட அறிவியல்), அர்த்த சாஸ்திரம் (அரசியல் மற்றும் பொருளாதார அறிவு) போன்ற உபவேதங்களும், அத்துடன், யோக சாஸ்திரம், நியாய சாஸ்திரம், தர்ம சாஸ்திரம், கோகா- அல்லது காம-சாஸ்திரம், மோட்ச சாஸ்திரம், அலங்கார சாஸ்திரம் (சொல்லாட்சி), காவ்யா சாஸ்திரம் (கவிதை), சங்கீத சாஸ்திரம் (இசை), நாட்டிய சாஸ்திரம் (நாடகம் மற்றும் நடனம்) என அத்தனையும் அன்றைய கல்வி முறையில் கண்டறியப்பட்டவைகள்.

அதற்குக்காரணம், அவர்கள் அனைத்து வெளிப்புற இந்திரியங்களான கண்கள், காதுகள், மூக்கு, நாக்கு, தோல் மற்றும், உட்புற இந்திரியங்களான **மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்** போன்று, பிரதி பிம்பிக்கின்ற பிம்பங்கள் அனைத்திற்கும், ஆதாரமான மூலப் பொருளாகவும், சுத்த அறிவாகவும், **ஒரு அரசன் போன்று ஆன்மா (அறிவு) இருப்பதையும்** அறிந்து, உணர்ந்துக் கொண்டதினால், ஆக்கப்பூர்வமான அறிவு அன்றைய மனிதர்களிடம் வெளிப்பட்டது.

அத்துடன், இந்த ஆன்மாவின் அறிவில் பிரதிபிம்பிக்கின்ற பிம்பங்களே **'சிதாபாசன்'** என்ற சீவனாக உள்ளும், புறமும் வெளிப்பட்டு, அனைத்தையும் அறிகின்ற இந்திரியங்களான **மனம், புத்தி** போன்றவைகளாகப் பிரகாசிக்கின்றன என்பதை அன்றைய அறிஞர் பெருமக்கள் அறிந்திருந்தனர்.

ஆனால், இன்றைய கல்வி முறையில் இந்த உண்மையை உணரக்கூடிய கல்வியைக் கற்றுக் கொடுப்பதற்கு பதிலாக, உடலையும், மனதையும், புத்தியையும் மேலும் வலுவாக்குகின்ற வழிமுறைகளைக் கற்றுக் கொடுக்கின்றனர். அதனால்தான் இன்றைய மனித சமுதாயம் மனதின் பிடியில் சிக்கிக்கொண்டு, ஏற்கனவே கண்டுபிடித்தவைகளையே மனப்பாடப் பகுதிகளாகக் கற்றுக் கொண்டுள்ளது.

நம் முகத்தையே நாம் கண்ணாடிக்குள்ளே மற்றொரு பிரதிபிம்ப முகமாகக் காண்பது போன்று, பரமான்மாவின் (அறிவின்) நிழல் பிரதிபிம்பித்து, சீவனுக்கு (மனதிற்கு) **'சுயபுத்தி'** (மனம்) போன்று தோன்றுகிறது.

கலங்கமில்லாத ஈஸ்வரவிருத்தி (பிரபஞ்ச மனம்) பிரதிபிம்பித்து, சீவனில் **'சிதாபாசன்'** என்றவாறு நம்முடைய **'தனித்த மனம்'** உண்டாகின்றது.

இவ்வாறு, பிரதிபிம்பித்த அந்த அகண்ட பேரறிவாகிய பிரம்மத்தின் அறிவுதான் தன்னுடைய **சிற்றறிவு** என்பதை அறிந்துக் கொள்வதைத்தான் இங்கு **"ஞானம்"** எனப்படுகின்றது. இதை அறியாமல் இருப்பதைத்தான் **அஞ்ஞானம்** எனப்படுகின்றது.

அதாவது, **அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள்** என்ற மூன்றில் (திரிபுடி), அறிபவனாகிய **'மனம்',** ஆன்மாவின் மூலமாக, (அறிவு மூலமாக) அறியப்படுகின்ற பொருள்களான இந்திரியங்களைக்கொண்டு, அனைத்தையும் அறிகின்றது என்று அறிவதே **"ஆன்ம ஞானம்"** என்று கூறப்படுகின்றது.

அதாவது, இந்த உடலுக்கும், மனதுக்கும் உண்டான மூன்று அவஸ்தைகளான **ஆழ்ந்த உறக்க நிலை, கனவு நிலை, விழிப்பு** நிலை போன்ற அனுபவங்களை, எப்போதும் அறிந்து, உணர்வது எதுவோ? அந்த **"அறிவே நான்"**. அல்லது அந்த **"உணர்வே நான்"** என்பதே **ஆன்ம ஞானம்** ஆகின்றது.

பல விதமான எண்ணங்களில் உண்டான, பல்வேறு விசயங்களின் வடிவத்தைப் பற்றிக்கொண்ட மனமானது, **குடம், துணி, புத்தகம்** போன்று கற்பித்துக்கொண்ட, அதனதன் வடிவத்தை எடுத்துக்கொண்டு, இந்த உலகத்தைப் படைத்துக் கொள்கின்றது.

இவ்வாறு, பலவிதமான வடிவங்களை ஏற்றி வடிவமைத்துக்கொண்ட, ஆன்மாவின் பிரதி பிம்பமான **ஆபாச சீவன்**, பல்வேறு எண்ணங்களினால் மனதினை உண்டாக்கிக் கொள்கின்றது.

இது எவ்வாறெனில், ஆழ்ந்த கருமையான இருளில் கண்களும், வெளிச்சமும் இன்றி, எந்த ஒரு பொருளையும் எவ்வாறு நாம் காண முடியாதோ? அதுப்போல, பிரம்மத்தின் (அறிவின்) பிரதிபலிப்பாகிய இந்த **'மனம்'** இன்றி, இந்த உலகத்தைக்காண முடியாது.

இருளிலுள்ள அனைத்து பொருட்களையும் காண வேண்டுமானால், அதற்கு, **கண்களும், விளக்கு வெளிச்சமும்** வேண்டும். அதுவே, சூரியனுடைய ஒளியைக் காண வேண்டுமானால், அதற்கு **கண்கள் மட்டும்** இருந்தால் போதும்.

அதுப்போல, பரந்து விரிந்திருக்கின்ற இந்த உலகத்தை உண்மைப்போன்று காண வேண்டுமென்றால், அந்தக்கரண விருத்தியான **'மனம்'** மற்றும், ஆன்மாவின் அறிவில் பிரதிபிம்பிக்கின்ற பிம்பமாகிய **"சிதாபாசன்"** என்ற **சிற்றறிவும்** இருந்தாக வேண்டும்.

ஆக, ஆன்மா (அறிவு) என்ற மெய்ப்பொருளைக் காண்பதற்கு, மனதை இதுப்போன்று விசாரணை செய்து பழகுவதினால், மனம் தெளிவடைந்து, தன் உண்மை சொரூபமாக ஆன்மாவை (அறிவை) பிரகாசமாகக் காட்டும்.

அதுவே, தெளிவடையாத மனதிற்கு **'இந்த உலகம் உண்மையாகவும், பிரம்மம் (அறிவு) எட்டாதது போன்றும் இருக்கும்!'**.

அந்தக்கரணத்தின் விருத்தியான பல்வேறு எண்ணங்களும், சீவனில் பிரதிபிம்பித்த, ஆன்மாவின் பிரதிபிம்பமான சிதாபாசமும் ஒன்று சேர்ந்தக்கலவையே **"மனம்"** எனப்படும்.

இதில், ஆன்ம ஞான கல்வியாகிய வேதாந்த சாஸ்திரங்களை சத்குருநாதரின் வாக்கால் கூறக்கேட்டு, அந்தப்பாடங்களில் உண்டான சந்தேகங்களை அவரிடமே விசாரித்து, விடையைக்கண்டு, தெளிவடைந்த மனம் (சீவன்) ஆன்மாவை (பிரம்மத்தை) அறிந்துக் கொள்ளும்.

அதுவே, இதுப்போன்ற ஆன்ம ஞானக் கல்வியைக் கற்காததும், வேதாந்த விசாரத்தில் ஈடுபடாததும் ஆகிய, **சிதாபாசனுடன் கூடியுள்ள மனதிற்கு (சீவனுக்கு) பிரம்மத்தை அறிந்துக் கொள்ள முடியாது.**

அது, **எட்டாதப் பொருளாகவே** இருக்கும்.

ஆக, விசாரணை செய்து அதன் உட்பொருளை அறியாத மனதிற்கு **'ஆன்மா (அறிவு) எட்டாது'** என்பதை அறிந்து, மனதை அடிக்கடி வேதாந்த விசயங்களை **கேட்டல்,** அவ்வாறு கேட்டவைகளைப் பற்றி **சிந்தித்தல்,** அவ்வாறு சிந்தித்ததின் உட்பொருளை **தியானித்தல்** என்றவாறு இருக்கும் சாதகன் **சிரவண, மனன, நிதித்யாஸனத்தின்** மூலம் தன் உண்மை சொருபத்தை அறிந்து, உணர்ந்து அனுபவமாக்க முடியும்.

மனதின் இயல்பான சுபாவம் **சத்துவகுணம் மட்டுமே** ஆகும். ஏனெனில், இந்த மொத்த பிரபஞ்சமாக இருப்பது எதுவோ? அதுவே, **ஈஸ்வரன் என்ற மாயை** ஆகும்.

அந்த ஈஸ்வரனின் இயல்பான குணம் **சத்துவம்** ஆகும்.

மற்ற **ரஜோகுணம், தமோகுணம்** என்ற இரண்டு குணங்களும், ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்களால் உண்டான உலக விவகாரங்களில் ஈடுபட்டதின் வாயிலாக, மனதிற்கு வந்து ஒட்டிக்கொண்ட குணங்களாகும். **சத்துவகுணம்** மூலம் நம்முடைய நற்பண்புகளை மனதிற்கு மேலோங்கச் செய்தால், மற்ற இரண்டு குணங்களும் தானாகவே கீழே தாழ்ந்து போய்விடும்.

இவ்வாறு, சன்மார்க்கமான நற்பண்புகளை விடாமல் கடைப்பிடித்துக் கொண்டு, **நிஷ்காமிய கர்மத்தில்** எந்த விதமான பிரதிபலனும் எதிர்ப்பார்க்காமல், அனைத்தையும் ஈஸ்வர காரியமாகக்கருதி, செய்துக்கொண்டு வந்தால், **தமோகுணமும், ரஜோகுணமும்** மாறி, **சத்துவகுணம்** மேலோங்கும்.



இரண்டு முகம் பார்க்கும் கண்ணாடிகளைக் கொண்டு, ஒன்றுக்கு நேர் எதிராக, மற்றொன்றைக் காட்டும்போது, அந்த இரண்டு கண்ணாடிகளிலும் எந்த ஒருபிம்பமும் தோன்றாமல், இரண்டும் ஒன்று போலவே அதன் இயல்பில் ஒன்றாகி, அவைகளுக்குள் எந்த விதமான பேதமும் உண்டாகாமல் தெளிந்த **பளிங்கு போன்று பிரகாசமான** கண்ணாடியைக் காண்கின்றோம்.

அதுவே, அந்த இரண்டு கண்ணாடிகளுக்கும் நடுவில் நாம் சென்று நின்றதும், நம்முடைய ஒரு உருவம் அந்த இரு கண்ணாடிகளின் மூலம் பல உருவங்களாகக் காட்சி கொடுக்கும்.

இது எவ்வாறு நிகழ்கின்றது என்பதை நாம் சிகை அலங்காரம் செய்யும் முடிதிருத்தம் கடைகளில் அனுபவமாக உணரலாம்.

அதுப்போல, அளவிட முடியாத அண்ட சராசங்களாக விரிந்துக்கொண்டு, **அறிவாய், ஆனந்த மயமாய்** இருக்கின்ற, ஒன்றேயான பரப்பிரம்மத்துடன், நிர்விகல்பமான, கலங்கமற்ற, ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்களின் எழுச்சி இல்லாத **தெளிந்த மனம்** இரண்டறக் கலந்து விட்டால், இந்த **உலகமும், மனமும்** இல்லாமல் போய் அந்த ஏக **அறிவு பளிங்குபோன்று பிரகாசமாகக்** காணப்படும்.

அதுவே, அந்த பரமான்மாவின் (அறிவின்) நிழல் பிரதிபிம்பித்து, சீவனுக்கு **‘சுயபுத்தி’** போன்று இருப்பதினால், அந்த புத்தி சக்தியை தன்னுடைய புத்தி சக்தியாகப் பாவித்துக்கொள்ளும் ‘**மனம்**’ அறியாமை காரணமாக ‘**நான்**’, ‘எனது’ என்ற அஹங்காரத்தை அடைந்து, அத்தகைய பல்வேறு ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்களின் மூலம் அனேக அல்லல்களை உண்டாக்கிக் கொள்கிறது.

இந்த மனமானது கண்ணிற்குத் தெரிகின்ற உருவமுடன் கூடிய ஸ்தூல உடலாகவும், கண்ணிற்குத் தெரியாத உருவமற்ற சூக்ஷும உடலாகவும் என இரண்டாக இருப்பதினால், இதை நாசம் செய்வது என்பது, ஸ்தூல பரு உடலை அழிப்பது ‘**சொரூப நாசம்**’ என்றும், சூக்ஷும உடலை அழிப்பது ‘**அரூப நாசம்**’ என்றும் இருவகையில் கூறப்படுகின்றது.

இங்கு மனதையும், உடலையும் இல்லாமல் செய்தல் என்பதை பெரும்பாலானவர்கள் தவறாகவே புரிந்துக் கொள்கிறார்கள். அதற்குக்காரணம், அவர்களது **அறியாமை** என்றே கூறப்படவேண்டும். மேலும், அவர்கள் மனம் அவ்வாறுதான் புரிந்துக் கொள்ளும் நிலைக்கு அவர்களாகவே பழக்கப்படுத்தி வைத்திருக்கின்றனர்.

ஆனால், இங்கு **மனம், உடல்** இல்லாமல் போவது, அல்லது **இறத்தல்** என்பதின் அர்த்தம் என்னவெனில், மனதில் ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்களை எல்லாம், இதுப்போன்ற **ஆன்ம ஞான கல்வி** முறையில் கற்றுக்கொண்ட பாடங்களைக் கொண்டு, அதே மனதை விசாரித்து, அதில் உள்ள அறியாமைகளை கலைந்துவிட்டால், அத்தகைய

சாதகனுக்கு தானாகவே, இந்த **உடல், மனம்** பற்றிய புரிதலின் காரணமாக, அவனது புத்திக்கு மட்டுமே அது பொய் என்பது தெள்ளத் தெளிவாகத் தெரியும். அப்போது மட்டுமே, அவனது உண்மை சொருபமான **"அறிவு"** அவனிடம் பிரகாசிக்கத் தொடங்கும்.

அதுவரை, பிரகாசமான சூரியனை கருமேகங்கள் மறைத்து வைத்திருப்பதைப் போன்று, இவனது அறிவை, அறியாமைகள் மறைத்துக் கொண்டிருக்கும்.

அந்த அறியாமைகளை அகற்றவேண்டுமானால், ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான எண்ணங்களை விசாரித்து, விவேகத்தைத் தருகின்ற ஆன்ம ஞானக் கல்வியைக் **கற்று, கேட்டு, சிந்தனை** செய்து, அதில் கூறப்பட்ட கருத்துக்களையெல்லாம் ஆராய்ந்து அதற்கான விடையைக் கண்டறிய வேண்டும்.

அதாவது, மனிதனிடம் உள்ள **'மனம்'** கண்ணிற்குத் தெரிகின்ற நிலையில், **ஸ்தூல உடல்** என்றும், கண்ணிற்குத் தெரியாத நிலையில், **சூக்ஷும மனம்** என்றும், இரண்டாக வகுத்து, அந்த மனதை இல்லாமல் செய்கின்ற வழிமுறைகளைக் கற்றுக்கொள்ள வேண்டும்.

அதற்கு, **ஒரே வழி! மனதை மனதால் அறிய முயற்சிப்பது மட்டும்தான்.**

இதில், உருவமுடன் கூடிய மனம் **சத்துவகுணம், ரஜோகுணம், தமோகுணம்** என்ற முக்குணங்களையும் பொருந்தியவைகளாக **ஸ்தூல உடல்** எடுத்து, சாதாரண மக்களிடம் பரு உடலாகக் காணப்படுவதால், இந்த மனதை **உருவமுள்ள மனம்** (ஸ்தூல உடல்) எனக் கொள்ளலாம்.

இதில், **ரஜோகுணம், தமோகுணம்** என்ற இரண்டு குணங்களும் இன்றி, சத்துவகுணத்தை மட்டுமே தன் இயல்பாகக் கொண்ட **நிர்விகல்பமான மனம்** உடைய மனிதன், அந்த மகத்தான மனதைக் கொண்டும், பரு உடல் கொண்டும் வாழும்போதே, தன்னுடைய **ஸ்தூல உடல்** அபிமானம் இன்றி, எப்பொழுதும் தன் சுய சொரூபமான ஆன்மாவில் இணைந்து நிற்பதினால், அவனது ஸ்தூல உடலாகக் காட்சியாகின்ற மனம் **"சொரூப நாசம்"** அடைந்து விடுகின்றது.

மேலும், அவன் மனதைப்பற்றி ஆராய்ந்து, அந்த அறிவை அறிந்துக்கொண்டதினால், அந்த அறிவின் மூலமாகவே, தன் உடல் (மனம்) அபிமானத்தை அகற்றியவனாக அத்தனை உலக விவகாரங்களிலும் ஈடுபட்டுக் கொண்டிருந்தாலும், அதில் **தேக அபிமானம்** இல்லாத நிலையை **"விதேக முக்தி"** என்றும், அவனை **'விதேக முக்தன்'** என்றும் சாஸ்திரம் அழைகின்றது.

அவனது ஸ்தூல உடலை (பூத உடலை) அறிவினால் நீக்கி, **சொரூப நாசம்** செய்துவிட்டு, எப்பொழுதும் ஒன்றேயான அந்த **ஈஸ்வர நிஷ்டையில்**, தன் சுயசொரூபத்தில் (ஆன்மாவில்) நிலையாக நிற்கின்றவன்கூட, தன்னுடைய **பிராரப்தம்** என்ற இந்த உலகக் காரியங்களை உற்சாகமாக அந்த உடலைக்கொண்டு செய்துக் கொண்டுதான் இருப்பான்.

அவ்வாறு, அவன் வந்தக் காரியங்களை செய்து முடித்தவுடன், இந்த உலகத்தார் பார்வையில், தன்னுடைய பூத உடலையும் பிணமாக இங்கேயே விட்டு விட்டு, நிர்விகல்பமான அந்த **சூக்ஷும மனதை** அறிவுடன் இணைத்தவாறே இருந்த இரண்டற்ற நிலையில், அந்த ஏக அறிவாகிய பரப்பிரம்மத்துடன் ஒன்றாகக்கலந்து விடுகின்றதினால், அவனது சூக்ஷும மனமும் **"அரூப நாசம்"** அடைகின்றது.

இப்படிப்பட்டவன், எப்பொழுதும் **நிகழ்காலத்தில் மட்டுமே** இருப்பான்.

அத்துடன் அவன் வந்த வேலையை மட்டுமே பார்ப்பான். அவனே **'பார்ப்பனன்'** எனப்படுகின்றான். அவ்வாறே, அவன் அந்த பிரம்மத்தை அறிந்துக் கொண்டவன் ஆதலால், அவனையே **"பிராம்மணன்"** என்றும் சாஸ்திரம் அழைக்கின்றது.

அதாவது, இந்த உலகியல் சுபிட்சத்திற்காக மட்டுமே, உடல் எடுத்து வந்தவன் தனக்கு கிடைத்துள்ள பூத உடல் இருக்கும்வரை, அதன் அத்தியாவசியத் தேவைகளான **உண்ண உணவு, உடுக்க உடை, இருக்க இடம்** என எல்லாவற்றையும் பூர்த்தி செய்துக்கொள்ள வேண்டி, அதே உடலைக் கொண்டு உழைத்து, அற வழியில் சம்பாதித்து, பொருள்கள் ஈட்டி, அந்த உடலுக்குத் தேவையான அத்தனை தேவைகளையும் அவன் பூர்த்தி செய்துக் கொள்வான்.

அவன் எப்போதும் இறந்தகாலத்தை பற்றி பெருமையுடன் பேசுவதும், இனிவரும் எதிர்காலத்தைப்பற்றி கவலைக் கொள்வதும் என இல்லாமல், எதனாலும் சந்தோசமோ அல்லது துக்கமோ அடையக்கூடிய இருமைகளில் சிக்க மாட்டான்.

அத்துடன், அவன் அனைத்தையும் **'நானே செய்கின்றேன்'** என்ற சரீர அபிமானம் கொண்ட, கர்த்ருத்துவ புத்தியான அஹந்தை இல்லாதவனாக இருப்பதால், **"எல்லாம் ஈஸ்வரன் செயலே!"** என்ற அந்த ஏக அறிவின் ஈஸ்வர நிஷ்டையிலே, ஏகாந்தமாக இருந்துக்கொண்டு இருப்பான்.

அவனே, அவனது அகக்கரணங்கள், புறக்கரணங்கள் ஆகிய அனைத்துக்கும் **சாட்சியாக** இருந்துக்கொண்டு, **"அதுவே நான்"** என்ற தன் உண்மை சொரூபத்தில் திளைத்திருப்பான்.

அவன் மட்டுமே எங்கும், எப்போதும் நிறைந்துள்ள **பரந்த ஆகாசம் போன்று, சுத்த அறிவாகவே,** பூரண நிறைவாய், தன் சொரூபத்தில் நிற்பதினால், அவனுக்கு **புறத்திலும், அகத்திலும்** இனி, அறிவதற்கு அவனைத்தவிர அங்கு ஒன்றுமில்லை.

அவன் திட ஞானியாக, தன் ஆன்ம சொரூப திட நிச்சயத்தால், அந்த ஏக அறிவாகவே தன்னைக் காண்பானே தவிர, அந்த பரப்பிரம்மத்தின் பிரதிபிம்பமான **மனம் (ஆபாச சீவன்)** என்று தன்னை ஒரு நாளும் கருதமாட்டான்.

அதாவது, அவன் தன்னை அந்த மனமாகக் கருதாமல், அந்த அறிவாகவே (பிரம்மமாகவே) கருதிக்கொண்டு, தன் **விழிப்புநிலை** அனுபவங்கள் அனைத்தையும், தன்னுடைய **கனவுநிலை அனுபவங்களைப் போன்றே கற்பனையாகக் கருதுவதால்,** அவனுடைய தற்போதைய உடலான விழிப்புநிலை உடலைக் கூட அந்த அறிவின் தெளிவினால், இறந்து போனதாகக் கருதிக்கொண்டு, **சரீர அபிமானம்** இல்லாமல் இருப்பான்.

அவனை **விபரீதபுத்தி** உடையவனாகக் கருதும் மந்த மனம் படைத்தவர்கள் **அன்றும், இன்றும்** இந்த உலகில் இருக்கத்தான் செய்கிறார்கள். அதற்குக்காரணம் அவர்கள் தங்கள் மனதை **'நான்'** என்று கருதிக்கொண்டு, அந்த மனதிற்கு ஆதாரமான அறிவை அறியாமல், ஆணவத்தில் இருக்கிறார்கள் என்றே கூறப்பட வேண்டும்.

அதேசமயம், அந்த அறிவையே தன் சொரூபமாகக் கொண்ட அனைத்தையும் அறிந்த ஞானி மட்டுமே, அனைத்திற்கும் ஆதாரமான அந்த ஏக அறிவாகிய **விண்ணவனாகவே** (பிரம்மமாகவே) இருப்பதினால், அவன் அழியக்கூடிய இந்த உடல் மீது அபிமானம் இன்றி, இந்த **பஞ்சபூத ஸ்தூல உடல்** அக்கினியில் எறிக்கப்படும்வரை அல்லது மண்ணில் புதைக்கப்படும்வரை மற்றவர்களால், **சாதாரண மனிதன்** போன்றே மதிக்கப்படுவான்.

ஆனால், அவனது **தூய அறிவும்**, அந்த அறிவின் **இருப்பும்**, அந்த இருப்பில் உள்ள **ஆனந்தமும்** கூடிய வெட்ட வெளியாகிய **சத் - சித் - ஆனந்தம்** என்ற **"அதுவே நான்!"** என்பது, அவனுக்கு மட்டும்தான் தெரியும்.

**ஓம் தத் ஸத்!**



